


# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்சுவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 6 விளைச்சல் : 65 திருவள்ளுவர் ஆண்டு 2056, கன்னி (புரட்டாசி) – அகுதோபர் – 2025



# காலநிலை மாற்றக் கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| Anthropogenic emission | – | மாந்தவினை மாசு உமிழ்வு |
| Biomass Energy | – | உயிரிக்கழிவு ஆற்றல் |
| Carbon dioxide removal | – | கரிவளிம அகற்றம் |
| Carbon Neutrality | – | கரிம நடுநிலை |
| Carbon Pricing | – | கரிம விலையீடு |
| Clean Energy | – | மாசிலா ஆற்றல் |
| Climate action plan | – | காலநிலைச் செயல்திட்டம் |
| Climate Adaptation | – | காலநிலைத் தகவமைப்பு |
| Climate Change Mitigation | – | காலநிலை மாற்றத் தணிப்பு |
| climate emergency | – | காலநிலை நெருக்கடி |
| Climate Justice | – | காலநிலை அறம் |
| Climate Resilience | – | காலநிலை மீள்தன்மை |
| Eco–sensitive Zone | – | சூழல் காப்பு மண்டலம் |
| Ecological Footprint | – | சூழலியல் சுவடு |
| Environmental Sustainability | – | சுற்றுச்சூழலியல் உய்திறன் |
| Geothermal Energy | – | நிலத்தடி வெப்ப ஆற்றல் |
| Global Cooperation | - | உலகளாவிய ஒத்துழைப்பு |
| Global Environmental Issues | – | உலகளாவிய சுற்றுச்சூழல் சிக்கல்கள் |
| Green Building | – | பசுமைக் கட்டடங்கள் |
| Green Jobs | – | பசுமைப் பணிகள் |
| Greenhouse Effect | – | பைங்குடில் விளைவு |
| Natural Resources Conservation | – | இயற்கை வளக்காப்பு |
| Non point source pollution | – | பன்முனை மாசு |
| Pollution Reduction | – | மாசு குறைப்பு |
| Zero Emissions | – | உமிழ்வின்மை |

**சொற்குவை (sorkuvai.tn.gov.in ) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**

# சொல்வயல்


செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2056, கன்னி (புரட்டாசி) அகுதோபர் – 2025

ஆசிரியர் : திருமதி க. பவானி
இயக்குநர் (மு.கூ.பொ.)

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்தி

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திருமதி. க. கத்தூரி



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN):978-81-958032-0-0

# தமிழ்ச் சொற்பிறப்பு அறிவோம்

மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர், 'ஓ' என்னும் ஓரெழுத்து ஒருமொழியிலிருந்து ஏனைய சொற்கள் கிளைத்து வளர்ந்த முறையினைக் கீழ்க்காணுமாறு விளக்கியுள்ளார்.

ஓ = பொருந்து

ஓ + இயம் = ஓவியம் = ஒப்பனை, சித்திரம்

ஓ – ஒ

ஒ = பொருந்து

ஒட்டு = பொருந்து, ஒரு துணைவினை

செய்ய + ஒட்டார் = செய்யவொட்டார் = செய்ய விடார்

ஒட்டுமா = பொருத்து மாமரம்

ஒட்டு = பிசின், சூள்

ஒட்டு = ஒரு பொருளோடு பொருந்தி நில்

ஒண்ணு = பொருந்து, ஒரு துணை வினை

செய்ய + ஒண்ணாத = செய்யவொண்ணாத – செய்யொணாத

ஒத்து = மேல் வைத்தெடு, தட்டு

ஒத்தடம் = ஒரு மருத்துவ முறை

ஒத்தி = ஒத்து, ஊதும் குழல், அடைமானம், ஒத்துப்பார்க்கும் பயிற்சி

ஒப்பு = ஒத்துக்கொள், சமம்

ஒப்பனை = ஒப்பு, அலங்காரம்

ஒப்புவி – ஒப்பி

ஒம்பு = மனம் ஒத்துக்கொள்

ஒல் = பொருந்து

ஒன்று = பொருந்து, முதலெண்

ஒன்றி = தனி

ஒவ்வு = பொருந்து, ஒப்பாக்கு

ஒற்று = பொருந்து, பொருந்தி ஆராய்

ஒற்றர் = ஒற்றுபவர்

இவ்வாறு தமிழ்மொழியின் சொற்பிறப்பு வரலாறு குறித்து மொழிஞாயிறு பாவாணர் எழுதியுள்ள செய்திகளை நாமும் உணர்ந்து வருங்காலத் தலைமுறையினருக்கும் உணர்த்தி அவர்களின் உள்ளங்களில் தாய்மொழிப் பற்றை விதைப்போம்.

# சுடர் தந்த சுல்லும் நுல்லும்

சென்ற இதழின் தொடர்ச்சி....



இரா. திருமாவளவன்
தேசியத் தலைவர்,
மலேசியத் தமிழ்நெறிக் கழகம், மலேசியா

சூரிய மண்டலத்தைக் குறிப்பிடுகையில் ஆங்கிலத்தில் solar system என்பர். இதனைக் கதிர்மண்டலம் என்றும் அழைப்போம். சூரியனை நடுவாகக் கொண்டு இயங்கும் முறைமையினை heliocentric என அழைப்பர். இதில் பயன்படும் Helios எனுஞ் சொல்லும் சூரியனைக் குறிக்கும் எல்லி, எல்லியம், எல்லியன் எனும் சொற்களினின்று மருவியதே. இதனைப் பண்டைத் தமிழர் ஞாயிறு எனுந் தனிச் சொல்லாகவே குறித்தனர்.

நால்> ஞால் எனின் தொங்குதல் என்றும் நடு என்றும் பொருள்படும். நல் > நள் > நள்ளிரவு, நண்பகல் என்று சொற்கள் உருவாகியிருப்பதைக் காண்க. நல் > நய், நய் > அம் = நயம், நயம் > ஞயம். நயம் > நயன் = நடுநிலையான உண்மைத் தன்மை. நயன் > நயன்மை = நீதி. நயம் > ஞயம் > ஞாயம் = நீதி. நல் >நால் >ஞால்> ஞாய் > ஞாயிறு=நடுவாக இருந்து இயங்கி ஏனைய கோள்கைளை ஈர்க்கும் சூரியன்.

தொல்காப்பியத்தில் 'எல்லே இலக்கம்' என ஒரு நூற்பா வருகின்றது. 'எல்' என்பது இலக்கமாகும். 'எல்' எனின் ஒளி எனப் பொருள்படும். 'எல்' எனும் வேர்ச்சொல்லிருந்து எல்லன், எல்லியன், எல்லோன் முதலான சொற்கள் உருவாகி சூரியனையே குறித்தன. இந்த எல்லியன் எனும் சொல்லே Helium என மாறியிருக்கின்றது.

சூரியனை நடுவிடமாகக் கொண்டு இயங்கும் கதிரவ நடுவியக்க முறையை குறிக்கும் மிக நுட்பமான அறிவியல் சொல்லே 'ஞாயிறு' என்பதை நாம் அறிந்தோம் . இன்றைய அறிவியல் உணர்த்தும் அறிவியல் கருத்துருவை தமிழ்ச் சொற்கள் வாயிலாகப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பதாகவே தமிழர்கள் உணர்த்தியுள்ளனர் என்பது தமிழினத்தின் மிகத் தொன்மையான நுட்பமான அறிவியல் மூதறிவைக் காட்டுகின்றது.

இவ்வுண்மையை மாகறல் கார்த்திகேயனார் தம் மொழிநூலில் சுட்டிச் சொல்வது பேருவப்புக்குரிய செய்தியாகும்.

'ஞாயிறென்னுஞ்சொல், கோள்களுக்கு நடுவிலுள்ள தெனப்பொருள் தருகின்றமை யானும் சூரியனை யுணர்த்தும் பொழுதென்னுஞ் சொல்லில் நடுவினை யுணர்த்தும் பொதுவென்னுஞ் 'சொல், பிறக்கின்மையானும் கோள்களுக்கெல்லாம் சூரியன் நடுவினனென்பது பண்டைக் காலத்துக் கோட்பாடேயாம். பழைய சிவால யங்களிலுள்ள நவக்கிரக பிரதிட்டையில் சூரியனை நடுவிலும் ஏனைய கோள்கள் அவனைச்சூழவும் வைத்துப்பூசிப்பதே அதற்குச் சான்றென்க.

"இருந்தனர் கீழ்த்திசை நோக்கி யிட்டதோர் கருந்துகி னடுவுமிந் திராதி காவலர் அருந்திசை யெட்டினு மடைவிற் செம்மணி பெருந்தண்முத் தாதியெண் மணியும் பெய்தரோ"

(திருவிளையாடல்)

என்பதில் சூரியனுக்குரிய மாணிக்கத்தை நடுவிலும், ஏனைய கோள்களுக்குரிய முத்துமுதலியவைகளை அதனைச்சூழவும் பெய்தெனக் கூறலினாலுந் தெளிக.'

( மொழிநூல் பக்கம்: 73)

தாய்லாந்து பன்னாட்டு வானூர்திற்குச் சுவர்ணபூமி எனப் பெயர். இப்பன்னாட்டு வானூர்தி நிலையத்தில் இறங்கியதும் சவாடிக்காப் எனக் கையெடுத்து வணங்கி வரவேற்பர்.

இங்கு , சுவர்ணம், பூமி, சுவாதிக்கம் எனும் தமிழின் வடசொல் திரிபுகள் தாய் மொழியில் மருவியுள்ளதைக் கண்டறிய முடிந்தது.

இவற்றுள் சுவணர்த்திற்கும் சுவாதிக்கம் எனும் சொல்லுக்கும் சுல் வேர் மூலமே அடிப்படையானது.

சுல்>சொல்>சொலிர்

சுல்>சொல்>சொலிப்பு

சுல்>சுடு>சுடர்

சுல்>சுவல் > சுவதி > சோதி

சோதி>சோதிகம்>சுவதிகம்> சுவதிக்கம் > swadika

சுல்> சுவல் > சுவலை> சுவாலை = தீக் கொளுந்து

சுல் எனும் வெப்பத்தைக் குறிக்கும் வேரிலிருந்து ஒளிப்பொருளாக இச்சொல் உருவாகியது.

சோதி வட்டம் எனச் சூரிய மண்டலம் குறிக்கப்பட்டது. சோதி வட்டமே சோதிடமாயிற்று எனவும் கூறுவர் . இச்சொல் தமிழ் வேரிலிருந்தே உலக மொழிகளுக்குச் சென்றது.

Zodiac எனுஞ் சொல்லை ஒப்பிட்டுக் காண்க.

இட்லரின் சுவாத்திக் சின்னமும் இவ்வாறு சென்றதுதான். இதன் அடி வேர்மூலத்தை ஆராய்கின்ற பொழுதுதான் இதன் தாய் தமிழ் என்பது புலப்படும்.

சுவர்ணபூமி என வானூர்தி நிலையத்திற்குப் பெயர் வைத்திருப்பதும் தென்கிழக்காசியாவில் தமிழரின் தொடர்பையே உணர்த்துகின்றது.

மேற்கண்ட வேரச்சொல்லே சுவர்ணம் எனும் சொல்லுக்கும் மூலமாகும்.

சுல்> சொல்> சொன்னம்> சொர்ணம் > சுவர்ணம்

வடமொழியில் சுவர்ண என இச்சொல் திரிந்தது. பூ , கூ முதலான சொற்கள் மலர்தல் விரிதல் எனும் பொருளை உணர்த்துவன.

பூ> பூத்தல், மலர்தல்

எ.கா: பூவுலகம்

பூ> பூம்>பூமி எனத் திரிந்தது.

தென்கிழக்காசிய வட்டாரம் பொன் விளையும் நிலமாக ஒரு காலத்தில் இருந்தது. சங்க இலக்கியத்தில் சுவர்ணதீபம் எனும் சொல் பொன்னிறைத்தீவம்எனக்குறிப்பிடப்பட்டுள்ளது. வணிகத்தில் செல்வம் கொழிக்கும் நிலமாகவும் இவ்வட்டாரம் விளங்கியது. திசையாயிரத்து ஐந்நூற்றுவர் எனும் தமிழ்ப் பெயரில் மிகப் பெரிய வணிகப் பேரமைப்பு இயங்கியது என்பது வரலாற்றுப் பதிவாகும். இந்தோனேசியாவில் இதுகுறித்த கல்வெட்டுச் சான்றும் கிடைத்துள்ளது.

இனி பாவாணர் காட்டும் சுல்லில் மலர்ந்த சொற்கள் சிலவற்றைக் காணலாம் .

சுல்லில் வெப்பக் கருத்தும் ஒளிக் கருத்தும் தெளிவுற்று விளங்கும் என்பதை முன்னரே கண்டோம். சுல்லினின்று இக்கருத்துகளால் பல சொற்கள் உருவாகியுள்ளன.

அவை,

சுல்> சுல்லி = அடுப்பு

சுல் > சுள் = காய்தல் , சுடுதல், காய்ந்த கருவாடு

சுள்ளாப்பு = நாக்கில் சூடுபோல் குத்தும் உறைப்புச் சுவை, கடுவெயில்

சுள்ளி = வெயிலிற் காய்ந்த சிறு மரக்கிளை, விறகு

சுள் – சுள்ளை = 1. மட்கலஞ்சுடும் சூளை 2. செங்கல் சுடும் காளவாய்.

சுள்ளை – சூளை = 1. செங்கல் சுடும் காளவாய்.

சுள் – சுளுந்து = 1. சுள்ளியாலான தீப்பந்தம், தீப்பந்தம்.

சுள் – சுடு. சுடுதல் = 1. பொசுக்குதல் 2. காய்ச்சுதல். "சுடச்சுடரும் பொன்போல்" (குறள். 267). 3. எரித்தல். 4. பலகாரஞ் சுடுதல். 5. சுள்ளியில் வேகவைத்தல். 6. நீற்றுதல். 7. சூடிடுதல். 8. வெடிசுடுதல். 9. நெருப்பில் வாட்டுதல். 10. வருத்துதல். 11. கெடுத்தல்.

சுடு – சுடல் = 1. விளக்கிலிருந்து விழும் எண்ணெய்த் துளி. 2. எரிந்துகரிந்த திரிமுனை. சுடல் – க. சொடல்.

சுடல் – சுடலை = சுடுகாடு.

ம. சுடல, து. சுடலெ.

சுடு – சுடர் = 1. ஒளி. 2. கதிரவன். 3. வெயில். 4. திங்கள். 5. விளக்கு. 6. தீ நாவு. 7. நெருப்பு.

சுடரவன் = கதிரவன் (திவா.).

சுடரோன் = கதிரவன் (பிங்.).

சுடரார் = கடவுள்.

சுடு = சுடுகை

சுடு – சுடுவல் = வெப்பமான அரத்தம்

சுடுவல் – சுடுவன் (பிங்.).

சுடு – சூடு = 1. வெப்பம். 2. சுடப்பட்டது. 3. சுடுபுண். 4. ஒத்தடம். 5. சூட்டுக்கறி. 6. வடு 7. சினம். 8. சினமூட்டுவது. 9. மானவுணர்ச்சி. 10. விலையேற்றம்.

ம. சூடு, து. சூடு, தெ. த்சூடு (வெப்பம்), சூடு (சூட்டுக் குறி), க. தூடு (சூட்டுக்குறி).

சூடு – சூடம். சூடன் (கர்ப்பூரம்)

சூட்டுக்கோல் – சுட்டுக்கோல். ம. சூட்டுக்கோல்.

சூட்டு = 1. சூட்டிறைச்சி. 2. நாணல் தீப்பந்தம் (க. சூட்டெ).

சுள் – சுண்டு. சுண்டுதல் = 1. உலைநீர் வற்றுதல். 2. முகஞ் சுருங்குதல். 3. பயறு வேகவைத்தல்.

சுண்டு – சுண்டல் = நீர் முற்றும் வற்ற வேகவைத்த பயறு. சுண்டவைத்தல் = குழம்புகறி மறுநாளுங் கெடாதிருக்குமாறு நெருப்பெரித்து நீர் வற்றவைத்தல்.

சுண்டு – சுண்டான் = சிறுபிள்ளைகள் தீக்கொளுத்தி விளையாடுங் குச்சு (சுண்டாங்கொள்ளி).

சுள் – சுண் – சுண்ணம் = 1. நீறு. 2. சுண்ணாம்பு. 3. நறுமணப் பொடி. 3. பொடி. 4. பூந்தாது.

சுண்ணம் – பிரா. சுண்ண, வ. சூர்ண.

சுண்ணம் – சுண்ணம்பு – சுண்ணாம்பு = 1. சுட்ட சுண்ணாம்புக் கல். 2. நீற்றின சுண்ணாம்பு. '3. அரைத்த சுண்ணாம்பு. ம. சுண்ணாம்பு. சுண்ணாம்புக்காரன் = சுண்ணாம்பு விற்குங்குலத்தான். சுண்ணம் – சுண்ணகம் = நறுமணப்பொடி.

சுண்ணகம் – வ. சூர்ணக (c).

சுண்ணம் – சுணம் = 1. சுண்ணப்பொடி. 2. அழகுதேமல்.

சுண்ணித்தல் = நீற்றுதல்

சுண் – சுணங்கு = 1. பூந்தாது. 2. பூந்தாது படர்ந்தாற் போன்ற பசலை. 3. அழகுதேமல்.

சுள் – சுள்கு – சுட்கு – சுக்கு = காய்ந்த இஞ்சி. ஒ.நோ : வெள் – வெள்கு– வெட்கு.

ம. சுக்கு, வ. சுஷ்க.

சுக்குதல் = காய்தல், உணத்தல் (நாஞ்சில் வழக்கு). சுட்குதல் = வறளுதல்.

சுட்கு – சுட்கம் = 1. வறட்சி. 2. வறண்டது. 3. வறுமை. 4. கஞ்சத்தனம். 5. ஒருவகை நோய்.

ஒ.நோ : வெட்கு – வெட்கம்.

சுக்கு – சுக்கான் = 1. சுண்ணாம்புக்கல். 2. உருக்குச் செங்கல். சுக்கான் சுண்ணாம்பு, சுக்கான்பாறை என்பன வழக்குச் சொற்கள்.

சுள் – சுட்பு – சுப்பு. சுப்பெனல் = விரைந்து நீர் வற்றுதல். சுப்பு – சுப்பல் = சுள்ளி. சுப்பு – சுப்பி = சுள்ளி. சுள்ளி சுப்பல் (சுப்பி) என்பது உலக வழக்கிணைமொழி.

சுப்பு – சும்பு – சம்பு – சாம்பு.

சாம்புதல் = 1. எரிதல். 2. வாடுதல். 3. கெடுதல். 4. குவிதல் (திவா.). 5. ஒடுங்குதல் (பிங்.). 6. உணர் வழிதல். 7. ஒளி மழுங்குதல்.

சாம்பு – சாம்பல் = 1. எரிந்த சாணம். 2. வாடற்பூ. 3. முதுமை (பிங்.). 4. பருத்தி புகையிலை முதலிய பயிர்களைக் கெடுக்கும் பூச்சி. 5. சாம்பல் நிறம். எ–டு: சாம்பல்வாழை. ம. சாம்பல்.

சாம்பல் – சாம்பர். 1. திருநீறு. எரிந்த தூள்.

சுள் – சுர் – சுர் – சுரசுரா = சிறு பிள்ளைகள் கொளுத்தி விளையாடும் வாணவகை.

சுர் – சுரம் = 1. தீப்போற் சுடும் பாலைநிலம்.

சுரம் – வ. ஜ்வர (காய்ச்சல்).

சுள் – சள் – சண்டு = காய்ந்த புற்றாள், கூளம்.

சுர் – சர் – சருகு = 1. காய்ந்த இலை.

சர் – சரகு – சரக்கு = 1. காய்ந்த பண்டம். 2. காய்ந்த வணிகப் பண்டம். 3. வணிகப் பண்டம். 4. மருந்துப்பண்டம். எ–டு: பலசரக்கு. 5. கல்வியறிவு.

### 1. சினம்

சுள் – சுள்ளம் = சினம். சுள்ளம் – சுள்ளக்கம் = சினம். சுள்ளக்கம்– வ. க்ஷுள்ளக்க. சுள்ளாப்பு = பழிச்சொல்.

சுள் – சுளி. சுளிதல் = சினத்தல்.

சுளித்தல் = 1. சினத்தல். 2. வெறுத்தல்

சுண்டுசொல் = சுடுசொல்.

சுடுசுடு வென்றிருத்தல் = சினவியல்பாயிருத்தல்.

சுடுமூஞ்சி, சுடுநோக்கு, சுடுசொல்

2. உறைப்பு

சுவைகளுள் நெருப்புப் போன்றது உறைப்பு.

சுள் = உறைப்பு. க. சுள்.

சுள்ளிடுதல் (சுள்ளெனல்) = உறைத்தல்.

சுள்ளக்காய் = மிளகாய். சுள்ளிடுவான் = மிளகு

சுண்டு – சுண்டி = சுக்கு. சுண்டி – வ. சுண்ட்டி.

3. வெறிவேகம்

சுடு – சுடிகை = கள். சுண்டு – சுண்டம் = கள் (மூ. அ.). சுண்டை = கள். வ. சுண்டா.

சுண்டியுண்டை = சதுரக்கள்ளி, சித்திரகம், கொஞ்சி ஆகியவற்றின் வேர்ப்பட்டையாலும் சீரகத்தாலும் செய்து, சோற்றைப் புளிக்க வைப்பதற்குப் பயன்படுத்துங் குளிகை. சுண்டுசோறு = வெறிப்புளிப் பேற்றிய சோறு.

4. சுருங்கல்

சூட்டினால் நீர் சுருங்குதல் போல் வாடிச் சுருங்குதல் .

சுண்டி = தொட்டால் வாடி (தொட்டாற்சுருங்கி, தொட்டாற் சிணுங்கி). சுண்டி – சுண்டில் = தொட்டால் வாடி

சுட்கு – சுட்கம் = கஞ்சத்தனம். (ஈகை அல்லது செலவுச் சுருக்கம்).

சுக்குச்செட்டு = கஞ்சத்தனம். கஞ்சனைச் சுக்குச் செட்டி, சுக்கஞ்செட்டி, சுக்காஞ்செட்டி என்று சொல்வது உலக வழக்கு.

சம்பு – சம்பு. சம்புதல் = விலை குறைதல். சம்பு – சம்பல் = 1. விலையிறக்கம். 2. மலிவு.

சுணங்கு = மெலிவு.

5. சோம்பல்

சுணங்குதல் = 1. வினையிற் சோர்தல். 2. காலந்தாழ்த்தல்.

சுணக்கம் = 1. மனத்தளர்ச்சி. 2. காலத்தாழ்ப்பு.

சும்பு – சூம்பு. சூம்படைதல் = சோம்பற்படுதல் (நெல்லை வழக்கு).

சூம்பு – சோம்பு. சோம்புதல் = 1. சோம்பலாய் இருத்தல் 2. மதிமந்தமாதல். 3. வலிமைக் குறைதல் 4. வாடுதல். 5. கெடுதல். 6. பின்வாங்குதல்.

சோம்பு – சோம்பல். சோம்பு – சோம்பன் = சோம்பேறி. சோம்பு– சோம்பி = சோம்பேறி. சோம்பேறு – க. சோமாரி.

சோம்பு = 1. மடிமை 2. மந்தம். 3. தூக்க மயக்கம். 4. மயக்கம்.

ஒ.நோ : Gk. somnus (sleep).

சும்பு – சும் = மடிமை. சும்மா (சும்மாக) = மடிமையாக, ஒரு வினையுஞ் சொல்லாமல், ஒன்றுங் கொடாமல், ஒன்றும் பெறாமல், ஒரு பயனுமின்றி, ஒரு கருத்துமின்றி, ஒரு நோவுமின்றி, ஒருவகை அச்சமுமின்றி, இக் கருத்துகளையெல்லாம் 'சும்மாயிருத்தல்' என்னும் மரபுச்சொல் உணர்த்துதல் காண்க.

சும்மா எனுஞ் சொல், சுல் எனும் வேரடியினின்று , சுடுதற் கருத்தினால் வாடல், சுருங்கல் சோம்பல் வெறுமை முதலான கிளைக் கருத்துகளை உணர்த்தி வெளிப்பட்டச் சொல்லாகும் என்பதை அறிக. இதனால் சும்மா தமிழ் என்றே பெறப்படும்.

# 'ஆ' என்னும் சொல்




திரு. ந. தட்சணாமூர்த்தி
அஞ்சல்துறை மேனாள் கணக்கு அதிகாரி
பட்டுக்கோட்டை


## முன்னுரை

சொற்களும் சொற்களின் கூறுகளும் வெவ்வேறு மாறுபட்ட இலக்கண இயல்புகளைக் கொண்டிருத்தல் உண்டு. எடுத்துக்காட்டாக, 'அ' என்ற இடைச்சொல் 'வந்தன' என்ற சொல்லில் பலவின்பால் வினைச்சொல் விகுதியாக உள்ளது. 'நல்ல' என்ற சொல்லில் பெயரெச்ச விகுதியாக உள்ளது. 'மெல்ல' என்ற சொல்லில் வினையெச்ச விகுதியாக உள்ளது. இவ்வாறு 'ஆ' என்னும் சொல் எவ்விதம் பல்வேறு இலக்கண இயல்புகளைக் கொண்டுள்ளது என்று ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

## பெயர், வினை, இடைச்சொல்லாக 'ஆ'

'ஆ' என்பது பெயர்ச்சொல்லாய் வரும்போது 'பசு' என்ற பொருள் தருகிறது. ஆதல், ஆகுதல் போன்ற தொழிற்பெயர்ச்சொற்களில் இது வினையடியாக உள்ளது. ஆகு, ஆகுவாய் என்பவை 'ஆ' வை அடியாகக் கொண்ட வினைச்சொற்கள். உரிச்சொல்லாக இது வருவதில்லை. இடைச்சொல்லாகப் பல வகைகளில் இது பொருள் தருகிறது. இடைச்சொற்கள் என்பவை வேற்றுமை உருபுகள், பிற உருபுகள், சாரியைகள், உவம உருபுகள், இசைநிறைகள், அசைநிலைகள், குறிப்புச் சொற்கள், தத்தம் பொருள் உணர்த்துவன என்ற எட்டு வகையில் வரும் என்பது இலக்கணம் (ந.சூ. 420). இவற்றுள் 'ஆ' என்னும் இடைச்சொல் வரும் இயல்பைக் காண்போம். தத்தம் பொருளுணர்த்தும் சொல்லாக 'ஆ' வருவதை முதலில் காண்போம்.

## வியப்பு, இரக்கப் பொருள் தரும் 'ஆ'

வியப்பு, இரக்கம் முதலிய பொருளில் 'ஆ' வருவது உண்டு.

எ.கா – 'ஆ என்ன விந்தை!' – வியப்பு.
'ஆ மோசம் போனேனே!' – இரக்கம்.

## விகற்பப் பொருள்

'ஒன்றாவது, இரண்டாவது எனக்கு வேண்டும்'
'ஒன்றாதல் இரண்டாதல் எனக்கு வேண்டும்'
'ஒன்றாயினும் இரண்டாயினும் எனக்கு வேண்டும்'

இத்தொடர்களில் 'ஆ' என்பதுடன் அது, ஆதல், ஆயினும் என்பவை சேர்ந்து விகற்பப் பொருள் தருகின்றன.

இனி வினைச்சொல், பெயர்ச்சொல் உருபுகளில் 'ஆ' என்பது பயன்படுவதைக் காண்போம்.

## வினாச்சொல் விகுதி

வினைச்சொல்லில் வினாவிகுதியாக 'ஆ' என்ற இடைச்சொல் வரும்.

எ.கா – 'அவன் வருவானா?'

## எதிர்மறை வினைச்சொல் விகுதி

'ஆ' என்ற இடைச்சொல் பலவின்பால் எதிர்மறை வினைச்சொல் விகுதியாக வரும்.

எ.கா – 'மான்கள் வாரா', 'விளக்குகள் எரியா'

## எதிர்மறை இடைநிலை:

எதிர்மறை வினைச்சொல்லின் இடைநிலையாக 'ஆ' என்பது வரும்.

எ.கா – 'கூறினான்' – 'கூறான்'
'சேர்கின்றான்' – 'சேரான்'
'செல்வான்' – 'செல்லான்'

இவ்வாறே எதிர்மறை வினையாலணையும் பெயருக்கும் இடைநிலையாக 'ஆ' என்பது வரும்.

எ.கா – 'சென்றவன்' – 'செல்லாதவன்'

'ஆன்' விகுதியுடன் 'ஆ' என்ற எதிர்மறை இடைநிலை – ஒரு சிறப்பியல்பு

'அன்', 'ஆன்' இரண்டும் ஆண்பால் பெயர்ச்சொல் ஈறுகள்.

எ. கா – 'அவன் தருவன்',
'அவன் தருவான்'

'ஆன்' ஈறு பெற்ற ஒரு சொல்லில் 'ஆ' என்ற எதிர்மறை இடைநிலை சேரும்பொழுது ஒரு சிறப்பியல்பைக் காணலாம். அப்போது எதிர்மறை 'ஆ' என்ற இடைநிலை மற்றும் விகுதியின் ஆகாரம் என்ற இரண்டு ஆகாரங்களில் ஒரு ஆகாரம் கெட்டுப் புணர்ச்சி ஏற்படுகிறது.

எ. கா – செல்வான் – செல் + வ் + ஆன்
செல்லான் – செல் + ல்+ஆ + ஆன்

'ஆ' என்ற எதிர்மறை இடைநிலை முக்காலமும் காட்டும். 'செல்வான்' என்பதன் எதிர்மறையாகச் 'செல்லான்' என்பது ஆகும்பொழுது எதிர்கால வகர இடைநிலை கெட்டு, முக்காலத்துக்குரிய 'ஆ' என்ற எதிர்மறை இடைநிலை வந்து, லகர ஒற்று இரட்டித்து, இரு ஆகாரங்களில் ஒரு ஆகாரம் கெட்டுப் புணர்ச்சி முடிகிறது. எனவே இத்தகைய சொற்களில் ஒரு ஆகாரம் மட்டுமே இருப்பினும் எதிர்மறை ஆகாரமும் சேர்ந்ததே அது.

பெயரெச்ச வினையெச்ச எதிர்மறைகள்

எதிர்மறைப் பெயரெச்சம், வினை யெச்சங்களிலும் 'ஆ' என்பது இடைநிலையாக வரும்.

எ.கா – 'உண்ணாத குதிரை'
'உண்ணாது வந்தான்'

எதிர்மறை வியங்கோள் விகுதியாக 'ஆ'

'வேண்டாம்', 'வேண்டா' என்ற சொற்களில் 'ஆ' என்பது எதிர்மறைப் பொருள் தருகிறது. 'வேண்டும்' என்ற சொல்லின் இலக்கண வகைமை பற்றி நச்சினார்க்கினியர் தெளிவுபடுத்துகிறார். அவர் தன் தொல்காப்பிய உரையில் (வினையியல் சூ. 229) 'ஓதல் வேண்டும் ஆதும் என்னுமவர்', 'நீயே சொல்லல் வேண்டும்', 'நான் பொருதல் வேண்டும்' என்ற தொடர்களுக்கு "'தவிர்வாராக' எனவும் 'சொல்வாயாக' எனவும் 'பொருவேனாக' எனவும் பொருள் உரைக்க" என்று கூறி இவை வியங்கோள் வினைகள் என்பதைக் தெளிவாக்குகிறார். 'வேண்டும்' என்பதன் எதிர்மறையான 'வேண்டாம்', 'வேண்டா' ஆகியவை 'ஆ' என்ற எதிர்மறை விகுதி கொண்ட வியங்கோள் வினைகள்.

உடன்பாட்டுப் பொருளில் வரும் 'ஆ' என்ற இடைநிலை

'ஆ' என்பது இவ்வாறு பெரிதும் எதிர்மறைப் பொருளைத் தந்தாலும் உடன்பாட்டுப் பொருளிலும் இது பல இடங்களில் வருவதைப் பின்வருமாறு காணலாம்.

'செய்யா' என்ற வாய்பாட்டு வினையெச்சம்

வினையெச்சங்களில் ஒன்று 'செய்யா' என்ற வாய்பாட்டு வினையெச்சம். 'உண்ணா வந்தான்' என்ற இந்த வாய்பாட்டு வினையெச்சத் தொடரின் பொருள் 'உண்டு வந்தான்' என்பது. 'ஆ' என்பது பெரும்பாலும் எதிர்மறைக்கே உரியதாக உள்ள நிலையில் இவ்விதம் உடன்பாட்டுப் பொருள் தருவது வியப்பு தரும்.

"கன்றுபுகு மாலை நின்றோள் எய்தி
கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகி"
(அகம். 9:20 – 21)

"கைவேல் களிற்றோடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்"
(கு – 774)

"கல்லாக் கழிப்பர் தலையாயார் நல்லவை
துவ்வாக் கழிப்பர் இடைகள் …….."
(நாலடியார் –366)

என்ற பாடல்களில் 'கவியா' (கவித்து), 'புதையா' (புதைத்து), 'பறியா' (பறித்து), 'கல்லா' (கற்று) 'துவ்வா' (துய்த்து) என்ற 'செய்யா' வாய்பாட்டு வினையெச்சங்கள் உடன்பாட்டுப் பொருள் தருகின்றன.

### 'ஆநின்று' என்ற நிகழ்கால இடைநிலை

'செய்யா' என்ற உடன்பாட்டு வினையெச்சம் போலவே நிகழ்கால இடைநிலையான 'ஆநின்று' என்பதும் எதிர்மறைப் பொருள் தராமல் உடன்பாட்டுப் பொருள் தருவதும் வியப்பு தரும். 'செய்யாநின்றான்' என்பதன் பொருள் 'செய்து நின்றான்' என்பதே. 'செய்யாது நின்றான்' என்பது அல்ல.

### இல்லாப்பொருள்

இவை போலவே உடன்பாட்டுப் பொருள் தரும் ஒரு சொல் 'இல்லா' என்பது. 'இல்' என்ற சொல்லுடன் எதிர்மறை ஆகாரம் சேர்ந்தால் 'உள்ள' என்ற பொருள் தரவேண்டும். ஆனால் 'இல்லா' என்பது 'இல்' என்பதற்கு எதிர்மறை அல்ல. 'இல்' என்ற பண்படியில் இருந்து பிறந்த உடன்பாட்டுப் பெயரெச்சமாகவே அது உள்ளது. இலக்கண ஆசிரியர்கள் இதில் வரும் 'ஆ' வைச் சாரியையாகக் கொண்டுள்ளனர்[1]. ஆனால் இதனை ஒத்த 'நில்லா' என்ற சொல்லில் உள்ள 'ஆ' எதிர்மறைப் பொருள் தருவது கருதத்தக்கது.

### என்னாப் புலை நெஞ்சு

நாலடியார் பாடல் 32 ல், "...அறம் மறந்து போவாம் நாம் என்னாப் புலைநெஞ்சே..." என்ற வரி உரையாசிரியர்களிடையே குழப்பத்தை ஏற்படுத்தி உள்ளது எனலாம். 'என்னா' என்பதில் உள்ள 'ஆ' என்பதை எதிர்மறையாகக் கொண்டு சிலர் 'என்னாமல்' என்று பொருள் கூறியுள்ளனர்; சிலர் உடன்பாடாகக் கொண்டு 'என்று' எனப் பொருள் கூறியுள்ளனர்[2].

### 'என்றா' என்ற எண்ணிடைச்சொல்

'என' என்பது எண்ணப்படுபவைகளைச் சுட்டப் பயன்படும் ஒரு இடைச்சொல். இதை 'எண்ணிடைச்சொல்' என்பர்.

எ.கா –

"ஒன்றென இரண்டென மூன்றென..."
"நிலனென நீரென வளியென தீயென
விசும்பென..."

இவ்வாறே 'உம்', 'என்று' போன்றவையும் எண்ணிடைச்சொற்கள் ஆகும். தொல்காப்பியத்தில் 'என்றா' என்ற எண்ணிடைச்சொல் பல இடங்களில் வந்துள்ளது. இது 'என்று' என்ற பொருள் கொண்டது. பொதுவாக எதிர்மறையைக் குறிக்கும் 'ஆ' என்பதைப் பெற்றிருந்தாலும் இது உடன்பாட்டுப் பொருளே கொண்டுள்ளது.

### 'கொணா' என்ற ஏவல் வினை

ஆகார ஈற்றைக் கொண்ட 'கொணா' என்ற சொல்லும் எதிர்மறைப் பொருள் கொள்ளாமல் உடன்பாட்டுப் பொருள் கொண்டுள்ளது. கொணர்தல், கொணாதல் என்ற இரண்டுக்கும் பொருளாக, 'கொண்டுவருதல்' என்பதை அகராதி கூறுகிறது.

### 'ஆக' என்ற உடன்பாட்டுப் பொருளில் 'ஆ' என்பது வருதல்

"விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று"
(குறள் – 82)

என்ற குறளில் 'புறத்ததா' என்பதன் இறுதியில் வரும் 'ஆ' என்பது 'ஆக' என்ற பொருள் தருகிறது. இவ்வாறு நிற்பது விகாரத்தினாலா அல்லது 'ஆ' என்பதற்கே அந்தப் பொருள் உண்டா என்பது ஆராய்ச்சிக்குரியது. எனினும் 'ஆ' என்பது ஆதல், ஆகுதல், ஆக முதலிய சொற்களின் அடியாக இருக்கும் வினைச்சொல் என்பது தெளிவு. இங்கு 'ஆக' என்ற பண்புருபின் பொருளை 'ஆ' என்பது தருகிறது. இவ்வாறு பல இடங்களில் பழந்தமிழ் இலக்கியங்களில் 'ஆ' என்பது வருவதைப் பின்வருமாறு காணலாம்.

"ஐவர் என்று உலகேத்தும் அரசர்கள்
அகத்தராக்
கைபுனை அரக்கு இல்லை கதழ்எரி சூழ்ந்தாங்கு"
(கலி. 25: 3–4)

"தினைத்துணை நன்றி செயினும்
பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார்." – (கு –104)

"காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்
அதனினூஉங் கில்லை உயிர்க்கு" (கு – 122)

"ஒழுக்காறாக் கொள்க ஒருவன்தன் நெஞ்சத்து
அழுக்காறு இல்லாத இயல்பு." (கு –161)

மேலே உள்ள குறள்களுக்கு உரை கூறும் பழைய உரையாசிரியர்கள் அனைவரும் இக்குறள்களில் உள்ள 'ஆ' என்பதற்கு 'ஆக' எனக் கொண்டே பொருள் கூறியிள்ளனர். எனினும் 'ஆக' என்பதன் விகாரமாக 'ஆ' என்பது உள்ளதா என்பது பற்றி அவர்கள் விளக்கவில்லை. பரிமேலழகர் உரையை நுட்பமாக ஆராய்ந்து விளக்கும் 'நுண்பொருள் மாலை' என்ற நூலை எழுதிய காரி இரத்தினக் கவிராயர் குறள் 161 பற்றிக் கூறும்போது, 'ஆறாக் கொள்க', 'பனைத்துணையாக் கொள்க' என்பவற்றை 'ஆறாகக் கொள்க', 'பனைத்துணையாகக் கொள்க' என்று எடுத்துக்கொள்ள வேண்டுமெனக் கூறுகிறார். மேலும் திருக்கோவையார் உரையில் 'துணையாமனனே' என்பதற்கு பேராசிரியர் அமைத்த விதியால் இவ்வாறு கொள்க என்றும் கூறுகிறார்[3]

திருக்கோவையார் உரையில் பாடல் 7–இல் வரும் 'துணையா மனனே' என்பதற்கு பேராசிரியர், 'துணையாக மனனே' என்று பொருள் கூறி, "(இது) 'ஆக' என்பது 'ஆ' என நின்ற செய்யுள் முடிபு; புறனடையால் கொள்க" என்று கூறுகிறார். இது செய்யுள் விகாரம் என்பது அவர் கருத்து எனத் தோன்றுகிறது. அவர் நன்னூல் கூறும் விகாரத்தைக் கூறாமல் தொல்காப்பிய எழுத்ததிகாரப் புறனடையைக் கூறுவதாகத் தோன்றுகிறது. எப்படி இருப்பினும் இவ்விடங்களில் வரும் 'ஆ' என்பது 'ஆக' எனற பொருள் தருகின்றது என்பது தெளிவு.

## எதிர்மறைப் பொருள் தரும் 'செய்யா' எனும் வாய்பாட்டு வினையெச்சம்

'செய்யா' என்ற வாய்பாட்டு வினையெச்சம் உடன்பாட்டுப் பொருளில் வந்தாலும் அதனுடன் 'மல்', 'மை', 'மே' ஆகிய விகுதிகள் சேர்ந்து எதிர்மறைப் பொருள் தருவதை இலக்கண உரையாசிரியர்கள் விளக்கியுள்ளனர்.[4, 5]

"கூறாமல் குறித்ததன்மேல் செல்லும் கடுங்கூளி" (கலி.1:3)

"கூறாமை நோக்கிக் குறிப்பறிவான்" (கு – 701) (கூறாமல் நோக்கி)

"உண்ணாமே சென்றான்" (உண்ணாமல் சென்றான்)

என்பவை எதிர்மறைப் பொருளுக்கு அவர்கள் காட்டும் எடுத்துக்காட்டுகள். இவற்றுடன் கீழே உள்ளவையும் எதிர்மறைப் பொருள் தருவதை அறியலாம்.

"காணாது கழிந்த வைகல்...." (புறம். 176:11)
"உண்ணாது நோற்பார் பெரியர்...." (கு – 160)
".... ஊட்டா கழியும் எனின்" (ஊட்டாது கழியும்) (கு – 378)
"காக்கை கரவா கரைந்துண்ணும்....." (கரவாமல் கரைந்துண்ணும்) (கு – 527)

மேலை உள்ளவற்றில் 'செய்யா' வாய்பாட்டு வினையெச்சத்துடன் 'து' சேர்ந்து எதிர்மறைப்பொருள் தருவதைக் காணலாம். இது 'செய்து' என்ற வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சத்தின் எதிர்மறையாகும். எந்த விகுதியும் சேராமல் 'செய்யா' என்ற வாய்பாட்டு வினையெச்சமே எதிர்மறைப் பொருள் தருவதையும் மேலே காணலாம். இது செய்யுள் விகாரமா என்பது ஆராய்ச்சிக்குரியது.

## 'ஆ' என்பதன் இரு முரண்பட்டபொருள்கள்

ஆ' என்பது எதிர்மறைப் பொருளையும், 'ஆதல்' என்பதன் வேர் என்ற முறையில் உடன்பாட்டுப் பொருளையும் தன் இரு முரண்பட்ட பொருள்களாகக் கொண்டுள்ளதை இவ்வாறு அறிகிறோம். 'ஆ' என்பதில் இருந்து 'ஆக', 'ஆகி', 'ஆய்', 'ஆகிய', 'ஆய', 'ஆன' முதலிய சொற்கள் தோன்றுவது ஆராயத்தக்கது. 'ஆ' என்ற வினை வேர்ச்சொல்லுடன் 'அ' என்ற வினையெச்ச விகுதி சேர்ந்து நடுவில் ககர எழுத்துப் பேறு பெற்று 'ஆக' என்ற வினையெச்ச பண்புருபு தோன்றுவதை அறிய முடிகிறது. ஒப்புமை: நடவாதான், வருதி என்ற சொற்களில் உள்ள எழுத்துப்பேறுகள் பற்றி இலக்கண ஆசிரியர்கள் விளக்கம்.[6, 7] இவ்வாறே 'ஆ'வுடன் வினையெச்ச விகுதிகளான 'இ', 'ய்' சேரும்போது

'ஆகி', 'ஆய்' என்பவை தோன்றுகின்றன. 'ஆகி' என்பதில் ககரமெய் எழுத்துப்பேறு. ஆக, ஆகி, ஆய் என்பவை வினையெச்சப் பண்புருபுகள். எ.கா – வேகமாக நடந்தான், காதலாகி உருகினான், வேகமாய் நடந்தான்.

'ஆகி' என்பதுடன் பெயரெச்ச விகுதியான 'அ' என்பது சேர்ந்து 'ஆகிய' என்ற பெயரெச்ச உருபு உருவாகிறது. இங்கு யகரமெய் உடம்படு மெய்யாகும். 'ஆ' உடன் பெயரெச்ச விகுதியான 'அ' சேர்ந்து நடுவில் உடம்படுமெய்யான யகரமெய் பெற்று 'ஆய' என்பது தோனன்றுகிறது. 'ஆ' வுடன் பெயரெச்ச விகுதியான 'அ' சேர்ந்து னகரமெய்யை எழுத்துப் பேறாகப் பெற்று 'ஆன' என்ற பெயரெச்ச உருபு தோன்றுகின்றது. ஆகிய, ஆய, ஆன என்பவை பெயரெச்சப் பண்புருபுகள். எ.கா – செம்மையாகிய தாமரை, தலையாய கடமை, வேகமான ஆறு.

வேற்றுமைத்தொகைத்தொடருக்கு மாறாக வேற்றுமை விரித்தொடர் இருப்பதைப் போல பண்புத்தொகைக்கு மாறாக பண்புவிரித்தொடர் என்பது இலக்கணத்தில் கூறப்படவில்லை. ஏனெனில் பண்புருபு விரியும்போது அது பெயரெச்சத் தொடர், வினையெச்சத் தொடர் என்ற இரண்டு வகைகளில் அமைந்துவிடுகிறது. வினையெச்சப் பண்புருபாக மேலே கூறிய 'ஆக', 'ஆகி' 'ஆய்' என்பவை உள்ளன. இவ்வாறே பெயரெச்சப் பண்புருபாக 'ஆகிய', 'ஆய', 'ஆன' என்பவை உள்ளன.

'ஆ' என்ற வினைவேர்ச்சொல்லுடன் உகரச் சாரியையும் ககர எழுத்துப்பேறும் பெற்று 'ஆகு' என்ற ஏவல்வினைச்சொல் தோன்றுவதாகத் தெரிகிறது. 'ஆ'வுடன் 'ஆய்' என்ற முன்னிலை ஏவல் விகுதி சேரும்போது 'ஆவாய்' என்ற முன்னிலை ஏவல்வினைச்சொல் ஏற்படுகிறது. 'கொணா' என்ற சொல்லுடன் 'ஆய்' என்ற முன்னிலை ஏவல் விகுதி புணர்ந்துகெட்டு 'கொணா' என்ற முன்னிலை ஏவல் வினையாக உள்ளது. ஒப்புமை: நட – நடவாய் ஆறுமுக நாவலர் விளக்கம்.[8] இதே ஒப்புமையில் 'கொணா' என்பதுடன் 'ஆகு' என்பதுபுணர்ந்துகெட்டதாகவும் கருதலாம். 'கொணா' என்பதன் வேர்ச்சொல் பற்றிய ஐயம் இருந்தாலும் 'ஆதல்' என்ற பொருளிலேயே இது உடன்பாட்டுப் பொருள் தருகிறது என்று கருதலாம். ஆகு, ஆவாய், கொணா என்பவை முன்னிலை ஏவல் வினைச்சொற்கள். 'ஆய்' என்ற முன்னிலை ஏவல் விகுதியின் தோற்றம் ஆராய்ச்சிக்கு உரியது.

இவ்வாறு 'ஆ' என்பது எதிர்மறை இடைச்சொல் என்ற வகையில் எதிர்மறைப் பொருள் தருவதையும், 'ஆதல்' என்பதைக் குறிக்கும் வேர்ச்சொல்லில் இருந்து தோன்றும் 'ஆக' முதலிய சொற்கள் உடன்பாட்டுப் பொருள் தருவதையும், அவை வெளிப்படையாகவோ மறைந்து நின்றோ இவ்விதம் உடன்பாட்டுப் பொருள் தருவதையும் பின்வருமாறு தொகுத்துக் கூறலாம்.

### எதிர்மறை

1. எதிர்மறை விகுதி – எ.கா – வாரா.
2. எதிர்மறை இடைநிலை – எ.கா –நடவான், நடக்காதவன்.
3. எதிர்மறை 'செய்யா' வாய்பாட்டு வினையெச்சம் – எ.கா –கரவா கரைந்துண்ணும், ஊட்டா கழியும்.
4. எதிர்மறை 'செய்யா' வாய்பாட்டுப் பெயரெச்சம் – ஓடாத மான், உண்ணாக் குதிரை.
5. எதிர்மறை வியங்கோள் வினை – எ.கா – வேண்டாம், வேண்டா.

### உடன்பாடு

1. உடன்பாட்டு 'செய்யா' வாய்பாட்டு வினையெச்சம் – எ.கா – செய்யா வந்தான் (செய்யா[கி] வந்தான் – செய்து வந்தான்)
2. 'ஆநின்று' எனும் நிகழ்கால இடைநிலை – செய்யாநின்றான் (செய்யா[க] நின்றான் – செய்கின்றான்)
3. உடன்பாட்டுப் பெயரெச்சம் – எ.கா – இல்லாப் பொருள் (இல்லா[கிய] பொருள்), என்னாப் புலைநெஞ்சே (என்னா[கிய] புலைநெஞ்சே)
4. உடன்பாட்டு ஏவல் – எ.கா – கொணா (கொணா(ய்) அல்லது கொணா[கு] – கொணர்)
5. எண்ணிடைச் சொல் – எ.கா – என்றா (என்றா[கிய])
6. பண்பு வினையெச்சம் – எ.கா – அகத்தரா (அகத்தரா[க]), புறத்ததா (புறத்ததா[க]), பொருளா (பொருளா[க]), வேகமாக, காதலாகி, வேகமாய்.
7. பண்புப் பெயரெச்சம் – செம்மையாகிய, தலையாய, வேகமான.

## முடிவுரை

'ஆ' என்பது இரண்டு முரண்பட்ட பொருள்களைக் கொண்டிருப்பதும் அதன் காரணங்களும், விளக்கங்களும் மேலே ஆராயப்பட்டன. அதன் பொதுவான எதிர்மறைத் தன்மைக்கு மாறாக, 'ஆநின்று', 'பறியா நகும்' போன்றவற்றில் உடன்பாட்டுத் தன்மை இருப்பது நீண்ட காலமாக எனக்கு விளங்கிக் கொள்ள முடியாததாக இருந்தது. அதனால் தோன்றிய ஆராய்ச்சியில் எனது சிற்றறிவுக்கு எட்டிய வரையில் ஆராய்ந்து மேலே கூறப்பட்ட முடிவுகளை அடைந்தேன். அறிஞர் உலகம் இவற்றை ஆராய்ந்து சரியாக இருப்பின் ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டிக் கொள்கிறேன்.

## மேற்கோள்கள்


1. ஆறுமுகநாவலர், இலக்கணச் சுருக்கம், 1921. பக். 28–29.
2. நாலடியார் உரைவளம், 1990, சரஸ்வதி மகால் நூலகம், 1990, பக். 89–90.
3. தண்டபாணி தேசிகர் (பதி–ர்), திருக்குறள் உரைக்களஞ்சியம், இல்லறவியல்,1983, பக். 466
4. தொல்காப்பியம் சொல்லதிகாரம் – நச்சினார்க்கினியர் உரை, 1999, சூ. 230 பக். 251.
5. கண்ணன், ரா. நன்னூல் உரைவளம், வினையியல், 2010, சூ. 342 பக்.334, 336.
6. ஆறுமுக நாவலர், இலக்கணச் சுருக்கம், 1921, பக். 26.
7. கண்ணன், ரா. நன்னூல் உரைவளம், பதவியல், 2010, பக். 246, 250, 252, 265.
8. ஆறுமுக நாவலர்,இலக்கணச்சுருக்கம்,1921, பக். 24.


## துணை நூல் பட்டியல்:


1. ஆறுமுக நாவலர், இலக்கணச் சுருக்கம், வித்யானுபாலனயந்திரசாலை, சென்னை, 1921 (13 ஆம் பதிப்பு)
2. இராசமாணிக்கனார், மா. கலித்தொகை – உரை, பூம்புகார் பதிப்பகம், சென்னை, 2011.
3. கண்ணன், இரா. (பதி–ர்), நன்னூல் உரைவளம் – பதவியல், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2010.
4. கண்ணன், இரா. (பதி–ர்), நன்னூல் உரைவளம் – வினையியல், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2010.
5. தண்டபாணி தேசிகர் (ப–ர்), திருக்குறள் உரைக்களஞ்சியம், இல்லறவியல், மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம், மதுரை, 1983.
6. திருக்கோவையார் – (பேராசிரியர் உரையும் பழைய உரையும்), அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைநகர், 1995
7. தொல்காப்பியம் சொல்லதிகாரம் நச்சினார்க்கினியர் உரை, சரஸ்வதி மகால் நூலகம், தஞ்சாவூர், 1999.
8. நாலடியார் உரைவளம், சரஸ்வதி மகால் நூலகம், தஞ்சாவூர், 1990 (இரண்டாம் பதிப்பு)
9. வரதராசனார், மு. திருக்குறள் தெளிவுரை, தி.சை.நூ.கழகம், சென்னை, 1994.
10. வேங்கடசாமி நாட்டார், ந.மு. அகநானூறு – உரை, தி.சை.நூ.கழகம், சென்னை, 1968


***

# Back என்றால் முன் என்றும் பொருள்



இலக்குவனார் திருவள்ளுவன்
தலைவர் – தமிழ்க் காப்புக் கழகம்

எந்த ஒரு சொல்லும் தான் பயன்படும் இடத்திற்கேற்ப உள்ள பொருளைச் "சுமந்து செல்லும் ஊர்தி"தான். எனவே, மூலச் சொல்லுக்கு நேரான பெயர்ப்புச் சொல்லை அமைக்காமல் மூலப் பொருளுக்கு ஏற்ற பெயர்ப்புச் சொல்லை ஆக்க வேண்டும். சொல் செறிவாயும் செவ்விதாயும் இருத்தல் வேண்டும். பயன்பாட்டுப் பின்னணியைக் கருத்தில் கொண்டு கலைச் சொற்களை உருவாக்க வேண்டும். " "குன்றக் கூறல்" முதலான நூல் குற்றங்கள் பத்தும் ""சுருங்கச் சொல்லல்" முதலான நூல் அழகுகள் பத்தும் சொல்லுக்கும் மிகப் பொருந்தும்.

"சொல்லுக சொல்லைப் பிறிதோர் சொல்
அச்சொல்லை
வெல்லும் சொல் இன்மை யறிந்து".

என்னும் திருக்குறளை நினைந்து தக்க சொல்லைத் தெரிவு செய்ய வேண்டும். அயற் சொல் கலப்பை அறவே நீக்க வேண்டும். உரிய சொல் கண்டறியும் வரை இடைநேரமாக அயற்சொல்லைப் பயன்படுத்த வேண்டிய தவிர்க்க இயலாத நேர்வுகளில் தமிழ் வரிவடிவிலேயே எழுத வேண்டும். பிறமொழிச் சொற்களைக் கையாளுவதை மானக்கேடாக நம் உள்ளுணர்வு உறுத்த வேண்டும். நாம் பயன்படுத்தக் கூடிய சொற்கள் புரியாதவையாக அமையலாம் என நாம் கருதும் நேர்வுகளில் அல்லது தெளிவுபடுத்த வேண்டிய தேவை உள்ள நேர்வுகளில் அடைப்பிற்குள் இதுவரை வழக்கத்தில் உள்ள சொற்களை அல்லது ஆங்கிலச் சொற்களைக் குறிக்க வேண்டும்.

நாம் கலைச் சொற்களை உருவாக்குவதன் நோக்கம் "அவை அயற்சொற்களையன்றி அல்லது அயற்சொற்களுக்கு இடந்தராமல் நின்று நிலைத்துப் பொருள்தர வேண்டும்" என்பதே. இதைக் கருத்திக் கொண்டு எளிய பயன்பாட்டிற்கு வழிவகுக்கும் வகையில் சொல்லாக்கத்தில் ஈடுபட வேண்டும்.? நேரான பெயர்ப்புச் சொல்லை அமைக்காமல் ஏற்ற சொல்லை அமைக்க வேண்டும் என்கிறீர்களே. அப்படியானால் என்ன பொருள்?

நல்ல கேள்வி. இதனை ஓர் எடுத்துக்காட்டு மூலம் விளக்க விரும்புகிறேன்.Back என்றால் தமிழில் என்ன பொருள்?
பின் எனப் பொருள்.

அப்படியானால் Back pain என்று சொன்னால் என்ன சொல்லுவீர்கள்?
முதுகுவலி என்போம்.

அதுபோல் Back–bone என்பது முதுகெலும்பு எனப் பொருளாகும். முதுகெலும்பைக் குறிப்பிடும்
Back–bone, ஆதாரம் என்னும் பொருளிலும்
Back–boneless – ஆதாரமற்ற என்னும் பொருளிலும் பயன்படுத்தப்பெறும்.

back file என்றால் என்ன பொருள்?
பின் கோப்பு என்போம்.
நன்றாக எண்ணிச் சொல்லுங்கள்
Back file என முந்தைய கோப்பைக் குறிப்பிடுகிறோம்

அஃதாவது முன்கோப்பு என்றுதான் கூறுகிறோம். பின் என்னும் சொல்லுக்கு நேர் எதிரான முன் என்னும் சொல்லை ஏன் கையாளுகிறோம்?

இந்த இடத்தில் கோப்பிற்குப் பின்புலமாக அமைவது அதற்கு முந்தைய கோப்பு என்பதால்தானே. அதுபோல் Back–date என்பது முன்நாள் ஆகும்.

இவ்வாறுதான் ஒரு சொல்லுக்குரிய நேரான பொருளைக் கையாளாமல் அச்சொல் அந்த இடத்தில் உணர்த்தும் பொருளைக் கையாள வேண்டும். Back என்றால் முதுகு என்றும் பொருள் உள்ளது அல்லவா? தமிழிலும் புறம் என முதுகு குறிக்கப் பெறும். எனவே தமிழ் மரபு உணர்ந்து "பின்" என இந்த இடத்தில் கையாளாமல் "புறம்" எனக் கையாள வேண்டும்.

Back என்னும் சொல் பின் என்னும் பொருளில் அல்லாமல் வேறு பொருள்களில் உள்ள சில சொற்களைப்பார்ப்போம். அதே போல் பின் என்னும் பொருளை உள்ளடக்கிய வேறு சில சொற்களையும் பார்ப்போம். அதுபோல் மரபுத் தொடர்களில் உள்ள சொற்களைப் பிரித்துப் பார்த்தும் பொருள் காணக் கூடாது.

Food back என்பதற்கும் உணவிற்கும் தொடர்பு இல்லை. மின்னூட்டம் என்றுதான் பொருள். Fly back period என்பதற்கும் பறத்தலுக்கும் தொடர்பு இல்லை. திருப்பும் நேரம் எனப் பொருள். அதுபோல் Fly back wheel என்பது சமன் சக்கரத்தைக் குறிக்கிறது.

Background என்றால் பின்னணி எனப் பொருள் இருந்தாலும் மங்கல் நிலையைக் குறிப்பிடும்.

Huckle–bone என்பது இடுப்பு எலும்பு அல்லது தொடை எலும்பைக் குறிக்கும்.Huckle–back என்றால் கூன் எனப் பொருளாகும்.

கடலாமைகளில் ஒரு வகையின் முதுகு கடினமாக இல்லாமல் தோல் போன்று இருக்கும். எனவே, இவ்வகை ஆமைகள் தோல் முதுகு ஆமை – தோல் முதுகி – Leather–back எனப்படும்.

Backhanded என்றால் மறைமுகமான என்றும் தெளிவற்ற என்றும் பொருள்கள்.

Outback என்றால் பொதுவாக வெளிநாடு என்றும் குறிப்பாக வெகுதொலைவு நாடு என்றும் ஆத்திரேலியாவில் வெகுதொலைவிலுள்ள குடியேற்ற நாடுகள் எனவும் குறிக்கப் பெறும்.
the back of beyond என்றல் நெடுந்தொலைவு என்றும் பொருள்

Back–chat என்றால் சுடுசொல் எனப் பொருள். Backmost என்றால் மிகப்பிந்திய என்றும் Pull–back என்றால் தடங்கல் என்றும் Backset என்றால் தடை/ தோல்வி என்றும் பொருள்.

Back என்றால் இத்தனைப் பொருட்கள் உள்ளனவா?

ஆமாம். ஆனால் இதை மொழிபெயர்பபாகக் கருதாமல் தொன்மையான தமிழில் உள்ள சொற்களைத்தான் இதற்குப் பொருத்தமாகக் கையாளுகிறோம் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். புதிய சொற்களாயின் அவையும் தமிழில் உள்ள சொற்களின் அடிப்படையில் உருவாக்கப்படுவனவே.

மேலும் சில சொற்கள் உள்ளன. அவற்றையும் பார்ப்போம்.

Backbite என்பது புறங்கூறுதலைக் குறிப்பிடும். Backside என்றால் பின்பக்கம் என்று மட்டும் அல்லாமல் இடத்திற்கேற்றாற்போல் நம்பிக்கை துற என்றும் வரும்.

get someones back up என்றால் எரிச்சலூட்டு என்றும்
on someones back என்றால் தொடர்ந்து எரிச்சலூட்டு என்றும் பொருள்
on ones back என்றால் படுத்த படுக்கையாக என்றும்
get one's own back என்றால் பழிவாங்கு என்றும் பொருள்.
Break ones back என்றால் கடுமுயற்சியுடன் உழை என்றும்
Break the back of என்றால் கடின வேலைப்பகுதியை முடி என்றும் பொருள்.

இவைபோல்,
Back–down – உரிமையை விடு
Back–handed – கேலியான
Back–lash – திடீர்த்தாக்குதல்
Back–log – வேலைத் தேக்கம்
Backput – திரும்பப் பெறு
see the back of– விட்டொழி
எனப் பொருள்களாகும்.

பயன்தரா அறிவுரையை water off a duck's back என்பர்.

இவைபோல் மேலும் சில பொருள்களில் பயன்படுகிறது. உரிய இடங்களில் அவற்றைப் பார்ப்போம்.

இங்கு நான் மரபுத் தொடர்கள் சிலவற்றையும் கூறிய காரணம் மரபுத்தொடரில் நேரான பொருளைக் கூறக் கூடாது என நினைவூட்டத்தான். மேலும் Back என்பது தொடக்க இடம், தொடக்க நிலை, கடந்தகாலம் என்பன போன்ற பொருள்களையும் உடையது. இவற்றையெல்லாம் அகராதியில் நீங்கள் கண்டு கொள்ளலாம். எனினும், சொல்லுக்கு நேரான சொல்லைக் கூறக்கூடாது; அச்சொல் பயன்படுத்தும் இடத்தில் உணர்த்தும் பொருளை வெளிப்படுத்தும் சொல்லைத்தான் பயன்படுத்த வேண்டும் என மனத்தில் பதிய வைத்துக் கொண்டால் போதுமானது.

## ஒருபொருட் பன்மொழி – மயக்கம்

இருள்
இளமை
உணராமை
ஏமம்
கழுமல்
பித்தம்
பேது
மயர்வு

மருள்
மறல்
மாழ்கல்
மாழாத்தல்
மான்றல்
மைந்து
மையல்

# கோடு!

முனைவர் ஆ. அரிமாப்பாமகன்
மேனாள் ஆங்கில விரிவுரையாளர்
புதுச்சேரி



அடி என்னடி உலகம்
இதில் எத்தனை கலகம் ...

கோடு போட்டு நிற்கச் சொன்னான்
சீதை நிற்கவில்லையே
சீதை அன்று நின்றிருந்தால்
இராமன் கதை இல்லையே...
(கண்ணதாசன், அவள் ஒரு தொடர்கதை).

******

"மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்."
(திருக்குறள்: 969).

'மானம்' என்பது தனிச்சொல்லாக வருங்கால் 'நிலையில் தாழாமை, தாழ்ந்தபின் வாழாமை' எனப் பொருள் தரும்.

* சுவர் சாய்வது போல இருக்கிறது, பெரிய மரம் ஒன்றை உதைமானமாக வைக்க வேண்டும்.
* கட்டடம் செய்த புத்தகங்களின் மேல் கனம் வைத்துப் படிமானம் செய்ய வேண்டும்.
* காய்ச்சல் அடிக்கிறதா, வயிற்றைப் படிமானமாகப் போடு. எல்லாம் சரியாகிவிடும்!

-- இவை மக்கள் பேச்சு வழக்குகள்.

இவற்றில் வரும் 'மானம்' என்னும் சொல் தனிச்சொல் இல்லை. பெயர்ச்சொல்லாக்க ஈறாக – விகுதியாக உள்ளது. புதிய சொற்களை உருவாக்கித் தருகிறது.

பாடு = உழைப்பு. தனிச்சொல்.
பாடு = பாடுதல். தனிச்சொல்.
இலம்பாடு, கூப்பாடு, புறப்பாடு – இவற்றில் 'பாடு' பெயர்ச்சொல்லாக்க ஈறு.

"'குலம் தரு வான் பொருள் குன்றம் தொலைந்த
இலம்பாடு நாணுத் தரும் எனக்கு' என்ன"
(சிலப்பதிகாரம்).

இந்த வண்ணமே,
பழங்கண், களைகண், முதுகண், வன்கண், புன்கண், தறுகண்... என்று வரும் சொற்கள் சில உள்ளன. வன்கண்மை, புன்கண்மை,தறுகண்மை என்றும் வரும்.

இவற்றில் 'கண்' என்பது பெயர்ச்சொல்லாக்க ஈறாக உள்ளது. கண் என்பதைத் தனிச் சொல்லாகக் கருதிப் பொருள் காண்பது பொருத்தமாக இல்லை.

"காமந் தாங்குமதி யென்போர் தாமது
அறியலர் கொல்லோ அனைமது கையர்கொல்!
யாமெங் காதலர்க் காணே மாயிற்
செறிதுனி பெருகிய நெஞ்சமொடு பெருநீர்க்
கல்பொரு சிறுநுரை போல
மெல்ல மெல்ல இல்லா குதுமே."
(கல்பொருசிறுநுரையார், குறுந்தொகை: 290).

உவமைச் சிறப்பினால் பெயர் பெற்ற புலவர்.
மதுகை = வலிமை.

கண், கை என்பன உறுப்புப்பெயராக இல்லாமல் சொல்லாக்க ஈறுகளாக உள்ளன.

"அஞ்சுமுகம் தோன்றில் ஆறுமுகம் தோன்றும்!
வெஞ்சமரில் அஞ்சேல் என வேல் தோன்றும்! – நெஞ்சில்
ஒரு கால் நினைக்கில் இரு காலும் தோன்றும்!
முருகா என்று ஓதுவார் முன்!"
(நக்கீரர்).

கால் = தடவை, முறை. (ஒருகால் காலம் என்பதன் சுருக்கம் ஆகலாம்!).

"பார்வல் இருக்கைக், கவிகண் நோக்கிற்,
செந்தொடை பிழையா வன்கண் ஆடவர்
அம்புவிட, வீழ்ந்தோர் வம்பப் பதுக்கை"
(புறநானூறு: 3).

"எள்ளது சிறப்பி னிமையவர் வியப்பப்
புள்ளுறு புன்கண் டீர்த்தோ னன்றியும்
வாயில் கடைமணி நடுநா நடுங்க
ஆவின் கடைமணி யுகுநீர் நெஞ்சுடத் தான்றன்
பெரும் பெயர்ப் புகா ரென்பதியே"
(சிலப்பதிகாரம்: 20, 51–55).

"கல்வி தறுகண் புகழ்மை கொடை எனச்
சொல்லப்பட்ட பெருமிதம் நான்கே."
(தொல்காப்பியம், மெய்ப்பாட்டியல்: 9).

"மெல் தினை மேய்ந்த தறுகண் பன்றி
வன் கல் அடுக்கத்து துஞ்சும் நாடன்"
(ஐங்குறுநூறு: 261).

மேற்கண்ட எடுத்துக்காட்டுகளில் வன்கண், புன்கண், தறுகண் என்பன பயின்றுவந்தமை காணலாம்.

பழுங்கண் = துன்பம்; சங்க இலக்கியங்களில் பயின்றுவந்துள்ளது.

"காலை வானத்துக் கடும் குரல் கொண்மூ
முழங்கு தொறும் கையற்று ஒடுங்கி நம் புலந்து
பழங்கண் கொண்ட பசலை மேனியள்
யாங்கு ஆகுவள் கொல் தானே "
(அகநானூறு: 174).

"கன்று புணர் பிடிய குன்று பல நீந்தி
வந்து அவண் நிறுத்த இரும் பேர் ஒக்கல்
தொல் பசி உழந்த பழங்கண் வீழ
எஃகு போழ்ந்து அறுத்த வாள் நிணக் கொழும் குறை
மை ஊன் பெய்த வெண்ணெல் வெண் சோறு
நனை அமை கள்ளின் தேறலொடு மாந்தி"
(பதிற்றுப்பத்து: 12).

களைகண் = பற்றுக்கோடு, ஆதரவு;
முதன்முதலாகச் சீவகசிந்தாமணியில் ஓரிடத்திலும், பின்னர்க் கம்பராமாயணத்திலும், தேவாரத்திலும், ஆழ்வார் பாடல்களிலும் பயின்றுவந்துள்ளது.

முதுகண் = ஆதரவு, காப்பாக இருப்பவர், காப்பாளர்.
கொங்குவேளிர் மாக்கதை எனப்படும் பெருங்கதையில் ஓரிடத்தில் வந்துள்ளது. வேறு இலக்கியங்களில் வந்ததாகத் தெரியவில்லை. (பின்னர்ச் சோழர் காலக் கல்வெட்டில் வந்துள்ளது – முனைவர் மு. இளங்கோவன் முகநூற் பதிவு).

[முதுகண் = காப்பாளன் – guardian.
(எ. கா.) சந்தரப்பட்டனையே
முதுகண்ணாகவுடைய ((S. I. I.) v, 272) –
விக்சனரி]

"நஞ்சு குடித் தாலுநவை யின்றுதவ நின்றால்
அஞ்சியொளித் தாலுமர ணில்லைதவ முலந்தால்
குஞ்சரத்தின் கோட்டிடையு முய்வர்தவ மிக்கார்
அஞ்சலில ரென்றுமற னேகளைகண் என்பார்"
(சீவகசிந்தாமணி: 2557).

உரை: என்றும் அறனே 'களைகண்' என்பார் அஞ்சல் இலர் – எப்போதும் அறனே 'ஆதரவு' என்பவர் எதற்கும் அஞ்சமாட்டார்.
குறிப்புரை: களைகண் : முதுகண் என்றாற் போலும் வழக்கு. முதுகண் – காப்பாக இருக்கும் முதியவர். முற்றிழை மகளிர்க்கு முதுகணாம் என்பது பெருங்கதை (1. 36 : 189).

* இக் குறிப்புரையில் முதுகண் மேற்கோளாகச் சுட்டப்படுகிறது.அவ் வடி பின்வருமாறு:
"முற்றிழை மகளிர்க்கு முதுகண் ஆமென."
(பெருங்கதை, உஞ்சைக்காண்டம், சாங்கியத்தாயுரை: அடி 198).
பொருள்: நிறைந்த அணிகலன் அணிந்த மகளிர்க்குப் 'பாதுகாப்பாக' அமைகுவள். ..
(பெருங்கதையின் காலம் மணிமேகலைக்கும்

சீவகசிந்தாமணிக்கும் இடைப்பட்டதாகலாம் என்பது உ.வே.சா., பொ.வே.சோ. கருத்து).

"எண்ணிய பொருள் எலாம் இனிது முற்றுக!
மண்ணிய மணி நிற வண்ண! வண் துழாய்க்
கண்ணிய! யாவர்க்கும் களைகண் ஆகிய
புண்ணிய! விடை' எனத் தொழுது போயினான்."

(கம்பராமாயணம், பரசுராமப்படலம்).

"எண்ணுகேன் என்சொல்லி எண்ணு கேனோ
எம்பெருமான் திருவடியை எண்ணி னல்லால்
கண்ணிலேன் மற்றோர் களைகண் இல்லேன்
கழலடியே கைதொழுது காணின் அல்லால்
ஒண்ணுளே ஒன்பது வாசல்வைத்தாய்
ஒக்க அடைக்கும்போ துணர மாட்டேன்
புண்ணியா உன்னடிக்கே போது கின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணியனே"

(தேவாரம்).

"ஊரிலேன் காணியில்லை உறவு மற்றொருவர்
இல்லை
பாரில் நின் பாதமூலம் பற்றிலேன் பரமமூர்த்தி
காரொளி வண்ணனே கண்ணனே கதறுகின்றேன்
ஆருளர் களைகண் அம்மா அரங்கமா நகருளானே"

(தொண்டரடிப்பொடியாழ்வார்).

"முற்றிழை மகளிர்க்கு முதுகண் ஆமெனச்
செவ்வகை உணர்ந்தோன் சேனைக் கணிமகன்
கோசிகன் என்றவன் குறிப்பெயர் கூறி
அடையாண் கிளவியோடு அறியக் கூறலும்"

(பெருங்கதை, உஞ்சைக்காண்டம், சாங்கியத்தாயுரை: 36, 198-201).

முதுகண் = காப்பாளன் = guardian;
கணிமகன் = நிமித்திகன் = soothsayer;
அடையாண்கிளவி = கடவுச்சொல் = password.

அடையாளமாக / குழூஉக் குறிப் போல மறைவாகச் சொல்லும் மொழி அடையாண்கிளவி என இப் பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆங்கிலத்தில் password அல்லது code word எனலாம்.

code என்னும் ஆங்கிலச் சொல்லானது மரம், மரக்கிளை எனப் பொருள் தரும் 'கோடு' என்பதுடன் தொடர்புடையது என அறியவரும் போது தமிழின் பெருமையைக் கண்டு வியப்படையாமல் இருக்க முடியாது!

கு - குவி - குவை - குவடு - கோடு = மலையுச்சி, சிமையம்.
முகடு > மோடு ஆதல் போலக் குவடு - கோடு.

கவை - கவர் - பிளவு - கவடு > கோடு = கிளை, மரக்கிளை. கம்பு > கொம்பு ஆதல் போலக் கவடு - கோடு.

"கோடுவாழ் குரங்கும் குட்டி கூறுப"

(தொல்காப்பியம்: 3, 557).

code word = அடையாண் கிளவி!
Code: கோடு - மரம் - மரப்பலகை - மரப்பலகையில் மெழுகு தடவிச் சட்டங்களைப் புத்தமாகத் தொகுத்ததாகச் சொல் வரலாறு கூறுகிறது = code of law.
code (n.)
c. 1300, "systematic compilation of laws," from Old French code "system of laws, law-book" (13c.), from Latin codex"systematic classification of statutory law," earlier caudex "book," literally "tree trunk," hence, book made up of wooden tablets covered with wax for writing. De Vaan traces this through Proto-Italic *kaud-ek- to PIE *kehu-d- "cleaved, separate," which he also sees as the root of cauda "tail"



# தொல்காப்பிய ஐ – பொருட்பன்மை

பேரா. முனைவர் ப. கொழந்தசாமி,
அரசினர் ஆய்வு நிறுவனம், புதுச்சேரி.

விளக்கவியல் இலக்கண நூலான தொல்காப்பியம் நுட்பமாக மொழி இயங்கியலை எடுத்துரைக்கின்றது. நூற்பாக்களில் இடம்பெறுகின்ற சொற்கள் செறிவானவை. அதனால் கொள்கை நோக்கில் ஒவ்வொரு சொல்லின் கருத்தையும் தெளியவேண்டும். இந் நிலையில் ஐ என்னும் சொல்லைப் பலபொருட்சொல்லாகத் தொல்காப்பியம் சுட்டுவதை விளக்குவதாக இக் குறிப்புரை இயல்கின்றது.

ஐ – உயிர் நெடில்; இரட்டையுயிர்; கூட்டொலி(54)
- உறவுப் பெயர் – அண்ணன் (1087)
- ஐந்து என்னும் எண்ணுப்பெயர்/ அடை (1311)
- இரண்டாம் வேற்றுமை உருபு (556)
- வியப்புப் பொருள உரிச்சொல் (869)
- விகுதி (708, 1222)
- சாரியை (1152)
- அசைநிலை (80)

இங்ஙனம் பெயர், இடை, உரி என்று பொருட்பன்மையில் ஐ இயலுமாற்றைத் தெளியுமாறே, குறிப்பிட்ட நூற்பாவில், விளம்பப்படுகின்ற இலக்கணக் கொள்கைக்கேற்ப ஒவ்வொரு சொல்லின் கருத்தையும் தெளிந்து புரிதிறனைச் செம்மையாக்கலாம்.

நன்றி : ஜெயதேவன்,வ., 2004, தொல்காப்பிய அகராதி, சென்னைப் பல்கலைக்கழகம்.

# அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 189,190–ஆம் கூட்டங்கள்




தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 187, 188ஆம் கூட்டங்கள் முறையே 16.09.2025, 23.09.2025 ஆகிய இருநாள்கள் நடைபெற்றன.

அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் தலைமையில் நடைபெற்ற கூட்டங்களில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு. ஆல்துரை, திரு. அ. மதிவாணன் 'அறிவியல் ஒளி' திங்களிதழ் ஆசிரியர் திரு.நா.சு.சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். மேலும் மேனாள் ஆங்கில விரிவுரையாளர் முனைவர் ஆ.அரிமாப்பாமகன், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா. சுலோசனா மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் பங்கேற்றனர்.

இவ்விரு கூட்டங்களிலும் சேர்த்து மொத்தம் 630 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

ஏற்பளிக்கப்பட்டுள்ள சொற்களுள் சில:

| | |
|---|---|
| Aerial yoga | தொங்கல் ஓகம் |
| Application blacklisted | இசைவு பெறாச் செயலி |
| Brute Force Attack | தரவுத் திருட்டு |
| Buerger's disease | குருதி அழற்சி நோய் |
| Buyback agreement | மீளப்பெறு ஒப்பந்தம் |
| Career ladder | தொழில் படிநிலை |
| Celeb bait | புகழாளர் பெயரால் மோசடி |
| Citify | நகரமாக்கல் |
| Computer Forensic | கணினித் தடயவியல் |
| Cyberpsychology | இணைய உளவியல் |
| Cyclothon | மிதிவண்டிப் பேரணி |
| Dart board | கட்டப்பலகை |
| Dip belt | எடை தாங்கிப்பட்டை |
| Glampervanning | பகட்டுந்து உலா |
| Pugilistic | மற்போர் வீரர் |
| Access Board | அணுகல் வாரியம் |
| Ballot Card | ஒப்போலைச் சீட்டு |
| Cure Period | சீராக்கக் காலம் |
| Data Accuracy | தரவுத் துல்லியம் |
| Yard Sign | அறிவிப்புப் பலகை |
| Zero Report | சுழியறிக்கை |
| Alert time | எச்சரிக்கை நேரம் |
| Barcode Reader | வரிக்குறிப் படிப்பி |
| Biennium | ஈராண்டுக் காலம் |
| media channel | ஊடக அலைவரிசை |
| Citizen Initiative | குடிமக்கள் முனைவு |
| City Charter | நகரப் பட்டயம் |
| Run–Off Election | தொடர் தேர்தல் |
| Sample Ballot | மாதிரி ஒப்போலை |

# தமிழ் வளர்ச்சி இயக்கக உதவி இயக்குநர்களுக்குப் பயிற்சி






தமிழ் வளர்ச்சி இயக்ககத்தில் புதிதாகப் பதவியேற்றுள்ள 13 உதவி இயக்குநர்கள் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் 06.10.2025, 07.10.2025ஆகிய இருநாள் பயிற்சி பெற்றனர்.

அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க.பவானி அவர்கள், புதிதாகப் பதவியேற்றுள்ள உதவி இயக்குநர்களுக்கு ஆட்சிமொழிச் செயலாக்க ஆய்வுப் பணிகள், வரைவுகள்–கோப்புகள் உருவாக்கம், போட்டிகள்–விழாக்கள் நடத்துதல் உள்ளிட்ட கடமைகள் குறித்து விளக்கமாக எடுத்துரைத்தார்.

அகரமுதலி இயக்ககப் பதிப்பாசிரியர்கள் முனைவர் மா.பூங்குன்றன் அகரமுதலிகளின் தோற்றம் வளர்ச்சி, தமிழின் வேர்ச்சொல்லாய்வு குறித்தும், முனைவர் தி.பாலசுப்பிரமணியன் மொழிபெயர்ப்பு குறித்தும், கண்காணிப்பாளர் திருமதி ஆ.மு.பிந்து தமிழ்நாடு அரசு முன்னெடுத்துச் செயற்படுத்திவரும் தமிழ்மொழி மேம்பாட்டிற்கான செயன்மைகள் குறித்தும் விளக்கியுரைத்தனர். தொகுப்பாளர்கள் திருமதி ஜெ.சாந்தி கலைச்சொல்லாக்கம் குறித்தும், முனைவர் வே.கார்த்தி அகரமுதலி இயக்ககத்தின் திட்டங்கள் செயற்பாடுகள் குறித்தும் எடுத்துரைத்தனர்.

நிறைவுநாளில், அகரமுதலி இயக்கக இயக்குநரால் (மு.கூ.பொ.) உதவி இயக்குநர்கள் 13பேருக்கும் அகரமுதலி இயக்ககம் வெளியிட்ட 48அரசுத்துறைகளுக்கான துறைசார் ஆட்சிச்சொல் குறுநூல்கள் நினைவுப் பரிசாக வழங்கப்பட்டன.

# கல்லூரி மாணவ – மாணவியர்க்கு அகப்பயிற்சி



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் அகப்பயிற்சித் திட்டத்தின்கீழ் (Internship programme), சென்னை – கிண்டியிலுள்ள செல்லம்மாள் மகல்லூரியின் முதுகலைத் தமிழ் இரண்டாமாண்டு மாணவியர்க்குத் தூயதமிழ்ப் பயன்பாடு, தமிழ்க் கணியச்சு, கலைச்சொல்லாக்கம், வேர்ச்சொல்லாய்வு, மின் அகராதியின் தேவை, மொழிபெயர்ப்பு உள்ளிட்டவை குறித்துப் பயிற்சியளிக்கப்பட்டது.

15.09.2025 முதல் 26.09.2025 வரை நடைபெற்ற அகப்பயிற்சியில் கலந்துகொண்டு பயன்பெற்ற 27 மாணவியர்க்கும் பயிற்சியின் நிறைவில் அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் சான்றிதழ்கள் வழங்கிப் பாராட்டுத் தெரிவித்தார்.



இதேபோல், 23.06.2025 முதல் 29.06.2025 வரை நடைபெற்ற அகப்பயிற்சியில் கலந்துகொண்ட, சென்னை – முகப்பேறு பகுதியில் அமைந்துள்ள மார் கிரிகோரியசு கலை மற்றும் அறிவியல் கல்லூரி மாணவ – மாணவியர்க்கும் சான்றிதழ் வழங்கிப் பாராட்டுத் தெரிவிக்கப்பட்டது.

# நாளும் விளையும் சொற்கதிர்

நாளும் விளையும் சொற்கதிர்

Finger Print

விரல் பதிவு

நாளும் விளையும் சொற்கதிர்

Ball Point Pen

கோலிமுனைத் தூவல்

நாளும் விளையும் சொற்கதிர்

Battery Car

மின்சீருந்து

நாளும் விளையும் சொற்கதிர்

Call Taxi

அழைப்பூர்தி

நாளும் விளையும் சொற்கதிர்

Cauliflower

பூக்கோசு

நாளும் விளையும் சொற்கதிர்

Fitness Studio

உடற்பயிற்சியகம்

நாளும் விளையும் சொற்கதிர்

CARTOON PICTURE

கருத்துப் படம்

நாளும் விளையும் சொற்கதிர்

Gymnastics

வளையுடற் பயிற்சி


நாளும் விளையும்
சொற்கதிர்
Visually Impaired
அகவிழியோர்


நாளும் விளையும்
சொற்கதிர்
FENCING
வாட்சண்டை


நாளும்
விளையும்
சொற்கதிர்
Goal Keeper
எய்வரணர்


நாளும்
விளையும்
சொற்கதிர்
GOLF
குழிப்பந்தாட்டம்


நாளும்
விளையும்
சொற்கதிர்
HOCKEY
தொடிக்கோல்


நாளும்
விளையும்
சொற்கதிர்
HURDLES
Hurdles
தடைதாண்டு ஓட்டம்


நாளும்
விளையும்
சொற்கதிர்
INDIA
JERSEY
அணிச்சட்டை


நாளும்
விளையும்
சொற்கதிர்
TRACK
பந்தயத் தடம்


நாளும் விளையும்
சொற்கதிர்
Cooling glass
தண்ணாடி


நாளும் விளையும்
சொற்கதிர்
Jack Plane
இழைப்புளி


நாளும் விளையும்
சொற்கதிர்
Jack Plane
இழைப்புளி


நாளும் விளையும்
சொற்கதிர்
JEANS
கரட்டுடை


Helicopter
உலங்கூர்தி